# திருப்புகழமிர்தம்




ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சாதாரண — மாசி

## இலட்சதீப நல்விழா

காங்கேய நல்லூர் முருகப் பெருமான் திருக்கோயிலில் நாளது சாதாரண ஆண்டு பங்குனி மாதம் 2ஆம் தேதி (16-3-71) செவ்வாய்க்கிழமை யன்று நிகழும். வழக்கம்போல் பெருமானுக்கு அபிஷேக ஆராதனைகளும் மாலையில் தேவார, திருப்புகழ்ப் பாராயணங்கள், விரிவுரைகள் இன்னிசை நிகழ்ச்சிகள் முதலியன நடைபெறும். விரிவான நிகழ்ச்சி நிரல் பின்னர் வெளிவரும்.

## எமது புதிய வெளியீடு

திருப்புகழ் விரிவுரை ஏழாவது தொகுதி பஞ்சபூத ஸ்தலங்களில் காஞ்சிபுரம் பாடல்கள் 44-ம், திருவானைக்காப் பாடல்கள் 14-ம் ஆகமொத்தம் 58 திருப்புகழ்ப் பாடல்களுக்கு விரிவான உரை அடங்கியது. டெமி 1/8 அளவில் 300 பக்கங்கள்.

**விலை ரூ. 4-00. தபாற் செலவு 1-40.**

கந்தரலங்காரம் விரிவான உரையுடன் (நான்காவது பதிப்பு)
**விலை ரூ. 3-50 தபாற்செலவு 1-25**

## அமுத நிலையம் வெளியீடு

**திருமுருகாற்றுப்படை விளக்கம்.** திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் எழுதிய விரிவான விளக்க உரையுடன். அருஞ்சொற் பொருள் அகராதியுடன் கூடியது. கிரௌன் 1/8 அளவில் 444 பக்கங்கள்.

**விலை ரூ. 8-00. தபாற் செலவு ரூ. 1-40**

## வாழும் வழி

ஆசிரியர் : திருமுருக கிருபானந்தவாரி அவர்கள். வாழும் வழி, கடவுளை நம்புவது அறிவுடைமை, கடவுள், வழிபாடு, அறம், ஞானம், இல்லறம், ஜீவகாருண்யம், ஒழுக்கம், அரசியல், இந்துமதம், பொது—எனப் பன்னிரண்டு தலைப்புக்களில் எழுதிய சிறு சிறு கட்டுரைகளைக் கொண்டது. கண்கவர் பதிப்பு. விலை ரூ. 1-50 (தபாற் செலவு பதிவுத் தபாலில் ரூ. 1-15)

மேற்படி புத்தகங்கள் யாவும் நமது காரியாலயத்தில் கிடைக்கும்.

முருகா.

## சந்தா நேயர்களுக்கு ஒரு முக்கிய அறிவிப்பு

முருகவேள் முழுமுதற் கருணையினால் நடந்துவரும் நமது திருப்புகழமிர்தம் வரும் விரோதிகிருது ஆண்டு (ஏப்ரல் 1971) முதல் மூன்று மாதங்களுக்கு ஒருமுறையாக ஆண்டு ஒன்றுக்கு நான்கு முறை வெளியாகும். (ஏறக்குறைய இதழ் ஒன்று 48 பக்கங்களுடன் வெளிவரும்.) நல்ல மேல் அட்டையுடன் கூடியிருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| ஆண்டுச் சந்தா | இந்தியா | ரூ. | 4 00 |
| ,, | வெளிநாடுகள் | ரூ. | 6 00 |
| ,, | தனிப் பிரதி | ரூ. | 1 00 |

ஒரு குறிப்பிட்ட அளவு பிரதிகளையே அச்சிடப்போவதால் விரோதிகிருது ஆண்டுக்குச் சந்தா செலுத்த விரும்புபவர்கள் ஒரு வருடச் சந்தாத் தொகையை நேரே நமது காரியாலயத்துக்கு 28-2-71க்குள் சேருமாறு அனுப்பிவிடுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். மேற்கொண்டு சேரும் சந்தாக்களை கைவசம் இருக்கக் கூடிய பிரதிகளை அநுசரித்து சேர்த்துக் கொள்ளப் படும்.

திருப்புகழமிர்தம் மாத வெளியீட்டுக்காகச் செலுத்தப்பட்ட ஆயுள் சந்தாக்கள் இந்த சாதாரண ஆண்டோடு முடிவடையும். ஆக, வரும் விரோதிகிருது ஆண்டு முதல் ஆயுள் சந்தாதாரர் கிடையாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

# ஸ்ரீ சிவனருட் செல்வர்

திருவருள் என்ற தங்கக் கம்பியில் எழுபத்திரண்டு நாயன்மார்கள் என்ற இரத்தினமணிகளைக் கோத்த மணிமாலை பெரிய புராணம். திருவருள் மயமானது இத்திருத்தொண்டர் புராணம். படிக்குந்தோறும் மனித இனத்தை உய்விப்பது பெரிய புராணம். பிறவிப் பெருங்கடலுக்குத் தோணியனையது. மனத்தளர்ச்சிக்கு ஆணியனையது. சிவகதிக்கு ஏற்றும் ஏணியனையது. சிவனருட் செல்வர் என்னும் இத்தகு வித்தகத்தெய்வத் திருநூலை உரை நடையாகவும் இன்றியமையாத பாடல்களுடனும் சிறந்த உவமை நயங்களுடனும் தக்க சான்றுகளுடனும் யாத்துள்ளேன். வானோரும் போற்றும் இதனை ஏனோரும் படித்துப் பயன்பெறும் பதிபுண்ணியச் செயலாக வானதி பதிப்பகத்தார் இப்போது வெளியிடுகின்றார்கள்.

இந்த அரிய பெரிய அருள்மணி மாலையை எல்லோரும் அணிந்து, சிவத்தைப் பணிந்து, வினை தணிந்து உய்வு பெறுக. வாழ்க உலகெலாம்.

அன்பன்

**கிருபானந்தவாரி**

**சிவனருட் செல்வர். 528 பக்கங்கள். கண்கவர் பதிப்பு விலை. ரூ. 10. (தபாற் செலவு ரூ. 1-50)**

கிடைக்குமிடங்கள் :

**வானதி பதிப்பகம்**
**82/11, பாண்டி பஜார், சென்னை-17.**

2. **திருப்புகழமிர்தம் காரியாலயம்**
89, சிங்கண்ண செட்டித் தெரு.
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

உ

Acc-No - 34332

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"





| மலர் 35 | சாதாரணஸு— மாசி மீ<br>பிப்ரவரி 1971 | இதழ் 11 |
|---|---|---|



## திருப்புகழ்

### திருவருணை

தோத கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
தோகை யர்க்கு நெஞ்ச மழியாதே
சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
சூழ்பி ணிக்க ணங்க ளணுகாதே

பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
பாசம் விட்டெ றிந்து பிடியாதே
பாவ லற்கி ரங்கி நாவ லர்க்கி சைந்த
பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்

வேத மிக்க விந்து நாத மெய்க்க டம்ப
வீர பத்ர கந்த முருகோனே
மேரு வைப்பி ளந்து சூர னைக்க டிந்து
வேலை யிற்றெ ளிந்த கதிர்வேலா

கோதை பொற்கு றிஞ்சி மாது கச்ச ணிந்த
கோம ளக்கு ரும்பை புணர்வோனே
கோல முற்றி லங்கு சோண வெற்பு யர்ந்த
கோபு ரத்த மர்ந்த பெருமாளே.

## பதவுரை

வேதம் மிக்க=வேதங்களால் மிகுதியாகப் பாராட்டப்பட்ட, விந்து நாத=விந்துநாதத்தின் மூலப் பொருளே! மெய் கடம்ப= உடம்பில் கடப்பமாலை யணிந்தவரே! வீரபத்ர கந்த=வீர வாளை யுடைய கந்தக் கடவுளே! முருகோனே=முருகப் பெருமானே! மேருவை பிளந்து=மேருமலையைப் பிளந்து, சூரனை கடிந்து=சூர பன்மனை அழித்து, வேலையில் தொளைந்த=கடலில் குளித்து எழுந்த, கதிர்வேலா=ஒளிமிகுந்த வேலாயுதத்தை யுடையவரே! கோதை= பெண்மணியும், பொன் குறிஞ்சி மாது=அழகிய குறிஞ்சி நிலப் பெண்ணுமாகிய வள்ளிநாயகியின், கச்சு அணிந்த=ரவிக்கை யணிந்த, கோமள குரும்பை புணர்வோனே=அழகிய இளநீரை யொத்த தனங்களை அணைந்தவரே! கோலம் உற்று இலங்கு=அழகு நிறைந்து விளங்கும், சோண வெற்பு உயர்ந்த=திருவண்ணுமலையில் உயர்ந்துள்ள, கோபுரத்து அமர்ந்த=கோபுரத்தின்கண் வீற்றிருக் கும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தோதகம்=மன நோயைத் தரும், பெரும் பயோதரத்து இயங்கும்=பெரிய கொங்கை களைக் கொண்டு நடக்கும், தோகையர்க்கு=விலைமாதர்கள் பொருட்டு, நெஞ்சம் அழியாதே=என் உள்ளம் அழிவுருமல், சூலை= சூலைநோய், வெப்பு=சுரநோய், அடர்ந்த வாதம்=மிகுந்த வாத நோய், பித்தம் என்று=பித்த நோய் என்ற பேர்களுடன், சூழ் பிணி கணங்கள் அணுகாதே=சூழுகின்ற நோய்க்கூட்டங்கள் அடியேனை நெருங்காமல், பாதக சமன்=பாவியாகிய இயமன், தன் மேதியில் புகுந்து=தனது எருமை வாகனத்தில் ஏறி வந்து, பாசம் விட்டு எறிந்து=பாசக்கயிற்றை என்மீது வீசி, பிடியாதே=என் உயிரைப் பற்ருமல், பாவலற்கு இரங்கி=பாவலனுகிய நக்கீரருக்கு இரக்கங் காட்டியவரே! நாவலர்க்கு இசைந்த=புலவர்கள் ஒப்பத்தக்க, பாடல்=பாடலையும், மிக்க செஞ்சொல் தரவேணும்=இனிமை மிகுந்த செவ்விய சொற்களையும் அடியேனுக்குத் தந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

வேதங்களில் வியந்து சொல்லப்பட்ட விந்து நாதத்துக்கு மூலப் பொருளே! உடம்பில் கடப்பமலர் மாலை தரித்தவரே! வீரவாளை யேந்திய கந்தக்கடவுளே! முருகப்பெருமானே! மேரு மலையைப் பிளந்தும், சூரனை யழித்தும் கடலில் குளித்தெழுந்த ஒளிமிக்க வேலாயுதரே! பெண்கள் நாயகியும், அழகிய குறிஞ்சிநிலப் பாவையுமாகிய வள்ளிபிராட்டியின் இரவிக்கை யணிந்த இளநீரை யொத்த இளங்கொங்கைகளைத் தழுவிய

வரே! அழகு நிறைந்து விளங்கும் சோணகிரியில் உயர்ந்த கோபுரத்தின்கண் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! மன நோயைத் தரும் பெரிய தனங்களைக் கொண்டு உலாவும் விலை மாதர்கள் பொருட்டு என் மனம் அழியாமலும், சூலை, சுரம், மிகுந்த வாதம், பித்தம் முதலிய பேர்களுடன் சூழுகின்ற நோய்க் கூட்டங்கள் என்னை அணுகாமலும், பாவியாகிய இயமன் தனது எருமை வாகனத்தின்மீது ஏறி பாசக்கயிற்றை வீசி என் உயிரைப் பற்ருமலும், நக்கீரருக்கு இரங்கியவரே! புலவர்கள் மெச்சத்தக்க பாடலையும், மிகுந்த இனிய செவ்விய சொற்களையும் அடியேனுக்குத் தந்தருள வேண்டும்.

## விரிவுரை

தோதகம்:—மனத்துயர்.

மாதராசையால் மனத்துயரம் மேலிடும்.

சூலை:—

பல மாதர்களுடன் உறவு கொள்ளுவதால் சூலை, வெப்பு நோய், வாதம், பித்தம் முதலிய நோய்கள் சூழப்பெற்று மாந்தர் வேதனைப்படுவர்.

பாதகச் சமன்:—

இரக்கம் இன்றி யாரையும் பற்றித் துயரம் புரிவதால் பாதகன் என்ருர்.

ஏழை, பணக்காரன்; இளைஞன், முதியவன்; என்ற வேற்றுமை பாராமல் எல்லாரிடமும் சமமாக நடப்பதனுல் இயமன் சமன் எனப் பேர் பெற்ருன்.

மேதி:—

மேதி—எருமை. எருமை எதற்கும் அஞ்சாது நிற்கும் முரட்டுத்தனம் உடையது. அஞ்சா நெஞ்சுடைய இயமன், அஞ்சும் இயல்பே யறியாத எருமையைத் தனக்கு வாகனமாகக் கொண்டு வருவான்.

இயமனுடைய எருமையின் உக்கிரம் இத்தன்மையது என்று அடிகளார் அடியிற்கண்ட பாடலிற் கூறுகின்ருர்.

''தமர குரங்களும் காரிருட் பிழம்பு
மெழுகிய அங்கமும் பார்வையிற் கொளுந்து

தழனுமிழ் கண்களும் காளமொத்த கொம்பும்
உளகதக் கடமாமேல்'' —திருப்புகழ்

**பாவலற் கிரங்கி:—**

சிறந்த பாவலராகிய நக்கீரருக்கு முருகவேள் அருள்புரிந்த அருட்செயலை இந்த சொற்றொடர் கூறுகின்றது.

**நாவலர்க்கிசைந்த பாடல்மிக்க செஞ்சொல் தரவேணும்:—**

புலவர் பெருமக்கள் மெச்சிப் பாராட்டக்கூடிய பாடலையும், அப்பாடலில் இனிய கனியமுதன்ன செவ்விய செழுஞ் சொற்களையும் முருகனிடம் அடிகளார் வேண்டுகின்றார்.

அருணகிரிநாதர் பாடியருளிய பாடல்கள் மதுரங்கனிந்த இன் தமிழ்ப் பாடல்கள் ஆகும்.

**வேத மிக்க விந்து நாத:—**

விந்து—வரிவடிவம்:
நாதம்—ஒலிவடிவம்.
விந்து—பீடம்.
நாதம்—இலிங்கம்.

இறைவன் இவைகளின் மூலப் பொருளாக விளங்குகின்றான். இவைகளின் நுட்பதிட்பங்களை வேதம் விளம்புகின்றது.

**வீரபத்ர கந்த:—**

பத்ரம்—வாள்.

''பத்திரம் வாங்கித் தான்முன்
நினைந்தஅப் பரிசே செய்தான்'' —பெரியபுராணம்

பத்ரம்—உயர்வு.

வீரத்தால் உயர்ந்தவர் என்றும் பொருள்படும்.

**மேருவைப் பிளந்து:—**

பாண்டி நாட்டில் வந்த பஞ்சம் நீங்கும் பொருட்டு உக்கிரப் பெருவழுதி, மேருவைச் செண்டால் எரிந்து நிதிகொணர்ந்த வரலாற்றைக் குறிக்கும்.

## கருத்துரை

அருணைக் கோபுரத்தமர்ந்த அண்ணலே! இனிய தமிழ்ப் பாடல் பாட அருள் செய்.

## திருப்புகழ்

பாண மலரது தைக்கும் படியாலே
பாவி யிளமதி கக்குங் கனலாலே
நாண மழிய வுரைக்குங் குயிலாலே
நானு மயலி லிளைக்குந் தரமோதான்
சேணி லரிவை யணைக்குந் திருமார்பா
தேவர் மகுட மணக்குங் கழல்வீரா
காண அருணையில் நிற்குங் கதிர்வேலா
காலன் முதுகை விரிக்கும் பெருமாளே.

### பதவுரை

சேணில்=விண்ணுலகத்தில் வளர்ந்த, அரிவை அணைக்கும்= தெய்வயானையம்மை தழுவுகின்ற, திருமார்பா=அழகிய மார் பினரே! தேவர் மகுடம் மணக்கும்=தேவர்களுடைய மகுடங்கள் நறு மணம் வீசும், கழல் வீரா=திருக்கழலையுடைய வீரமூர்த்தியே! காண அருணையில் நிற்கும்=அடியார்கள் கண்டு தொழ அருணசலத்தில் எழுந்தருளியுள்ள, கதிர்வேலா=ஒளி மிகுந்த வேலாயுதரே! காலன் முதுகை விரிக்கும்=அடியார் பொருட்டு இயமனை அவன் முதுகு விரிய அடித்து விரட்டும், பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! பாணம் மலர் அது தைக்கும்படியாலே=மன்மதனுடைய மலர்க் கணைகள் தைக்குங் காரணத்தாலும், பாவி இளமதி கக்கும் கன லாலே=பாவியாகிய இளம்பிறைச் சந்திரன் பொழிகின்ற நெருப் பாலும், நாணம் அழிய உழைக்கும் குயிலாலே=என்னுடைய நாணம் அழியுமாறு கூவுகின்ற குயிலாலும், நானும் மயலில் இளைக் கும் தரமோதான்=அடியவளாகிய நான் காம மயக்கத்தால் இளைத் துப் போவது தகுதியாகுமோ?

### பொழிப்புரை

விண்ணுலக மடந்தையாகிய தேவசேனை தழுவுகின்ற திருமார்பினரே! தேவர்களுடைய மகுடங்கள் நறுமணம் வீசும் வீரக் கழலையுடைய வீரமூர்த்தியே! அடியவர்கள் கண்டுதொழத் திருவண்ணமலையில் எழுந்தருளியுள்ள ஒளி மிக்க வேலாயுதரே! அடியவர் பொருட்டு இயமனுடைய முதுகு விரியுமாறு அடித்துவிரட்டும் பெருமிதமுடையவரே! மன்மத னுடைய மலர்க்கணைகள் என்மீது தைப்பதனலும், பாவியாகிய

இளந் திங்கள் பொழியும் நெருப்பாலும், நாணம் அழியுமாறு குயில் கூவுவதாலும், பெண்ணாகிய யான் காம மயக்கத்தால் இளைத்துப் போதல் நியாயமாகுமோ ?

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது. முருகனை விரும்பிய ஒரு தலைவி வருந்துகின்றாள்.

பாண மலர்:—

தலைவனை நாடுந் தலைவிக்கு மன்மதனுடைய கணையும், நிலாவும், குயிலும் மிகுந்த துயரத்தை விளைவிக்கும்.

சேணிலரிவை:—

சேண்—ஆகாயம். விண்ணுலகில் தெய்வ யானையால் வளர்க்கப்பெற்ற தேவசேனையை முருகன் தழுவியருள்புரிந்தார்.

தேவர் மகுட மணக்கும் கழல் வீரா:—

முப்பத்து முக்கோடி தேவர்களும் முருகப் பெருமானே முழுமுதற் கடவுள் என்று வீழ்ந்து வணங்குவதனால் முருகன் திருவடியாகிய மலர்தோய, அவர்கள் மகுடங்கள் நறுமணம் வீசுகின்றன.

"இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பு மென
திதயமு மணக்கு மிருபாதச் சரோருக னும்" —திருவகுப்பு

"சுரர்மாமுடி—கமழுங்கழலே" —அநுபூதி

காண அருணையில் நிற்கும் கதிர்வேலா:—

'காண அரிவை முன் நிற்கும்' என்றும் பாடம்.

இந்த வண்ணம் பாடம் என்று கொண்டால் இதில் ஒரு வரலாறு உளது.

அரிவை—முருகம்மையார்.

முருகம்மையார் இடையருது முருகா! முருகா என்று ஓதிக் கொண்டிருந்தார். அவருடைய கணவன் அம்மையின் அருமை பெருமைகளை யுணராது, அடுத்த வீட்டுக்காரன் பேரைக் கூறுகின்ருர் என்று பிழைபடக் கருதி ஐயுற்ருன். "முருகா என்று கூருதே" என்று தடுத்தான். நாப்பழக்கத்தால் அம் மையார் மீண்டும் மீண்டும் 'முருகா! முருகா!' என்று ஓதினுர். வெகுண்ட கணவன் வாள் எடுத்து வீசி, தடுத்த அம்மையார் கரத்தை வெட்டினுன். உதிரம் ஒழுக அம்மையார் ஒருமுறை 'முருகா!' என்ருர். முருகவேள் மயிலின்மீது வந்து காட்சி தந்தருளினுர். மறுமுறை முருகா! என்ருர். கரம் வளர்ந்தது. மூன்ரும் முறை முருகா என்ருர். முருகன் அம்மையாரை மயிலின் மீது ஏறச் செய்து கந்தலோகஞ் சேர்ப்பித்தருளினுர்.

ஒரு முருகா என்றென் னுள்ளங்குளிர உவந்துடனே
வரு முருகா என்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தரு முருகா என்று தான் புலம்பாநிற்பத் தையல்முன்னே
திருமுரு காற்றுப் படை யுடனேவருஞ் சேவகனே.

அரிவைமுரு காஎன் றழைக்குமுன் னேவந்து
கடிமுதவி நின்ற கருணைப பெருந் தேவா:
—திருப்போரூர்ச் சந்நிதிமுறை

முருகம்மையார் மிகப் பழங்காலத்தில் வாழ்ந்தவர். இந்த வரலாற்றைத் தனியே எழுதி வெளியிட்டுளது. விரிவாக அதில் காண்க.

**காலன் முதுகை விரிக்கும்:—**

அடியவர்கள் உயிரைப்பற்றும் பொருட்டு இயமன் வருவாணுயின் கந்தவேள் கருணையுடன் கானமயில்மீது தோன்றி, அவன் ஓட அவன் முதுகு விரிய அடித்து விரட்டி விலக்கி அருள்புரிவான்.

"கான மயிலை நடத்தும் பெருமாளே" என்றும் பாடம்.

## கருத்துரை

அருணைத் தேவே! உன்னை விரும்பும் பெண்ணுகிய என்னைத் தழுவுவாயாக.

# மகாபாரதம்

## அநுசாசன பருவம்

(239-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### மதங்கன்

### அந்தணப் பிறப்பின் அருமை

தருமபுத்திரர், "பிதாமகரே! நீர் தருமங் தெரிந்தவர்களில் சிறந்தவர். நிகரில்லாத நேர்மையுடையவர். அந்தணரது பெருமையைக் கேட்க விரும்புகின்றேன். பிரம்மண்யம் எதனால் வரும்?" என்று கேட்டார்.

பீஷ்மர் "அரசனே! பிராம்மணத் தன்மை மற்றையோர் பெறுவதற்கு அரிது; பல பிறப்புக்களில் செய்த புண்ணியத்தால் பெறத்தக்கது. இதுபற்றி ஒரு கதையுண்டு.

மதங்கன் என்றவன் பிராம்மணனுடைய மகன். ஒரு யாகத்தை நடாத்தும் பொருட்டு அவனை அவன் தந்தை அனுப்பினார். மதங்கன் கழுதைகளைப் பூட்டிய தேரில் ஏறிச்சென்றான். தேரையிழுக்கும் இளம் வயதுள்ள கழுதையைச் சாட்டையால் அதன் மூக்கில் பல முறை அடித்தான். அடிபட்ட கழுதையின் தாயாகிய பெண் கழுதை வருத்தமுற்று "மகனே! நீ அழாதே. பிராம்மணன் எல்லா உயிர்களிடத்திலும் கருணை காட்டுவான். இவன் அந்தணன் அல்லன். சண்டாளன். அதனால் உன்னை அடித்து இடர்ப்படுத்துகின்றான்" என்று கூறியது.

மதங்கன் தேரைவிட்டு இறங்கி அந்தப் பெண் கழுதையைப் பார்த்து "ஏ நற்குணமுள்ள கழுதையே! என்னைச் சண்டாளன் என்று கூறினாயே! அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டான். பெண் கழுதை "கள் குடித்து மயங்கியிருந்த உன் தாயை நாவிதன் கூடி நீ பிறந்தனை அதனால் உன்னிடம் பிரம்மண்யம் இல்லை. நீ சண்டாளனாகின்றாய்" என்றது. இதைக் கேட்ட மதங்கன் தன் பிறப்பின் இழிவை நினைத்துப் பெரிதும் வருந்தினான்.

தன் தந்தையிடம் தன் பிறப்பைக் கூறிவிட்டுக் கானகம்போய் பெருந்தவம் புரிந்தான். தவத்தால் உலகங்களைத் தகிக்கச் செய்தான். இந்திரன் அவன் முன் தோன்றி "மதங்கா! சுகத்தை விடுத்து ஏன் தவஞ் செய்கின்றாய்? உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள். தருவேன்!! என்றான்.

மதங்கன் "தேவர் கோமானே! நான் பிறப்பினால் இழிந்தவனானேன். பிரம்மண்யத்தை விரும்புகின்றேன். அதனைக் கொடு" என்றான். இந்திரன் "மதங்கனே! உனக்கு அது கிடைக்காது; சண்டாளப் பிறப்புடைய நீ பிராம்மணத்துவத்தைப் பெறமுடியாது;" என்று கூறி மறைந்தான்.

மதங்கன் மனந்தளராது, ஒரு காலால் நின்று அசையாமல் மீண்டுந் தவஞ்செய்தான். மறுமுறையும் இந்திரன் தோன்றினான். "அறிவில்லாதவனே! பெறுதற்கரியதைப் பெற விரும்பி வீண் முயற்சி செய்கின்றாய். பிறப்பினால் வரக்கூடியதைத் தவத்தினால் எப்படிப் பெறமுடியும்? குறுக்குப் பிராணிகளாகப் பலமுறை பிறந்தபின் ஓர் உயிர் சண்டாளப் பிறப்பை யடைகின்றது. மற்றுமுள்ள புல்கஸனாக ஆயிரந்தடவை பிறந்தபின் நாலாம் வருணத்தில் பிறக்கின்றான். நாலாம் வருணத்தில் முப்பது முறை பிறந்தபின் வைசியனாகப் பிறக்கின்றான். அறுபது முறை வைசியப் பிறப்பில் பிறந்தபின் அரச குலத்தில் பிறக்கின்றான். அறுபது முறை அரசகுலத்தில் பிறந்த பின் பிராம்மண குலத்தில் தாழ்ந்த பிறப்பை யடைகின்றான். இவ்வாறு இருநூறு முறை பிறந்தபின், ஆயுதம் பிடித்துப் பிழைக்கும் பிராம்மணனாகப் பிறக்கின்றான். இப்படி முந்நூறு முறை பிறந்த பின் ஜபம் செய்யும் பிராம்மணனாகப் பிறக்கின்றான். இந்த வண்ணம் நானூறு முறை பிறந்தபின் *சுரோத்திரியன் என்ற பிராம்மணனாகப் பிறக்கின்றான். அந்தப் பிறப்பில் நல்ல தவஞ் செய்து நற்கதியை யடைகின்றான். அப்பிறப்பில் தீவினை புரிவானாயின் மீளவும் தாழ்ந்த பிறப்பில் போய்ப் பிறக்கிறான் ஆதலால் நீ இப்பிறப்பில் பிராம்மணத்தவம் பெற இயலாது" என்று கூறி இந்திரன் மறைந்தான்.

மதங்கன் மறுபடியும் மன உறுதியுடன் நியமந்தவறாமல் ஆயிரம் ஆண்டுகள் ஒரு காலில் நின்று தவஞ் செய்தான்.

---

*சுரோத்திரியன்—வேதங்களைப் பொருளுடன் அறிந்து அனுஷ்டிப்பவன்.

இந்திரன் மீண்டும் அவன் முன் தோன்றி "அப்பா! இது வீண் முயற்சி. வேறு வரங்கேள்" என்றான். மதங்கன், கயைக்குச் சென்றுநூறுண்டுகள் தவஞ்செய்து உடம்பை எலும்புந் தோலு மாக வற்றச் செய்தான். இந்திரன் அவனுடைய தவத்துக்கு இரங்கி நினைத்தபடி விண்ணில் உலாவுந் திறனும், நினைத்த வுருவுடன் வாழும் தன்மையும் உடைய தேவத் தன்மையை வழங்கினான். மதங்கன் தேவத் தன்மையைப் பெற்றான். ஆனால் பிராம்மணத் தன்மையைப் பெற்றானில்லை. அது பிறப்பின் மேன்மையால் பெறக் கூடியது" என்று கூறினார்.

## விசுவாமித்திரர் வரலாறு

தரும நந்தனர், "பாட்டனாரே! விசுவாமித்திரர் அரசகுலத் தவராயிருந்து பிராம்மணத்துவத்தை எவ்வாறு அடைந்தார். அளவற்ற மகிமையுள்ள விசுவாமித்திரர் தமது தவ வலிமை யால் மகாத்மாவான வசிஷ்டருடைய நூறு புதல்வர்களை அழித்துவிட்டாரல்லரோ? ரிசீகருடைய புதல்வனாகிய சுனச் சேபனை அரிச்சந்திரனுடைய யாகத்தில் பசுவாக நியமிக்கப் பட்டிருந்த தறிந்து விடுவித்தார். அவனைத் தனக்கு மகனாகச் செய்தார். அவனை வணங்காமையால் விசுவாமித்திரர் தமது மற்றை ஐநூறு புதல்வர்களைச் சண்டாளராகுமாறு சபித்தார். வசிட்ட புத்திரர்களால் சபிக்கப்பட்ட திரிசங்கு என்ற இக்ஷு வாகுகுலமன்னனைத் தலைகீழாக சுவர்க்கத்தில் ஏற்றினார். அவன் இன்னுந் தென்திசையில் இருக்கின்றான். விசுவாமித்திரருடைய தமக்கை சத்தியவதி என்பவள் கௌசிகி என்ற பெயருடன் புண்ணிய நதியாகச் செய்யப்பட்டாள்.

அவருடைய தவத்துக்கு இடையூறு செய்த *பஞ்சசூடை யென்ற ரம்பை கல்லாகச் சபிக்கப்பட்டாள். விசுவாமித்திரர் வட திசையில் துருவனுக்கும் சப்த ரிஷிகளுக்கும் இடையில் ஒளி செய்துகொண்டிருக்கின்றார். இத்தகைய எண்ணற்ற மகிமையுடைய விசுவாமித்திரர் அரச குலத்தில் பிறந்தவர். இவர் பிரமரிஷியாக ஆனது ஆச்சர்யமாக இருக்கின்றது. மதங்கன் பிராம்மணத்வம் பெறாதொழிந்தான். இவர் எவ்வாறு பெற்றார்? இதனை எனக்கு விளக்கமாக விளம்ப வேண்டும்" என்று வினவினார்.

---

*பஞ்சசூடை—ஐந்து வளைகளைத் தரித்தவள்.

பீஷ்மர் "குந்தி புத்திரனே! பரதனுடைய குலத்தில் மிதிலன் என்ற ஒரு அரசன் இருந்தான். இவனுடைய மகன் ஜன்னு. இவனுக்குக் கங்கை புதல்வியாகப் பிறந்தாள். அதனுல் கங்கை ஜானவி என்று பேர் பெற்ருள். ஜன்னு என்ற மாமன்ன னுக்குச் சிந்துத்வீபன் என்ற மகன் பிறந்தான். இவனிடம் பலாகாசுவன் என்ற உத்தமன் பிறந்தான். இவனுக்கு தருமமே இரண்டாவது உருவம் எடுத்தது போன்ற வல்லபன் என்ற மகன் பிறந்தான். வல்லபனிடம் குசிகன் என்ற புதல்வன் பிறந் தான். குசிகனுக்குக் காதி பிறந்தான். காதி என்ற மன்னனி டம் சத்தியவதி என்ற பெண் பிறந்தாள்.

பிருகு முனிவருடைய தவப்புதல்வர் சியவனர். சியவனரு டைய புதல்வர் ரிசீகர். இவர் பெரிய தவ சீலர். ரிசீக முனிவர் காதியரசனுடைய புதல்வியாகிய சத்தியவதியை விரும்பினுர். ரிசீகர் ஏழை யென்று கருதிய காதி தன் புதல்வியைக் கொடுக்க மறுத்தான்.

ரிசீகரைப் பார்த்துக் காதி கூறுவான். "என் புதல்வியை உமக்குத் தருவதானுல், நீர் ஒரு காது மட்டும் கறுத்தவை யாகத் திங்கள் போல் வெண்மையாக ஒளி செய்யும் வாயுவேக முள்ள ஆயிரம் குதிரைகளைத் தரவேண்டும்" என்ருன்.

ரிசீகர் வருணனிடம் போய் அத்தகைய அரிய குதிரைகளை யாசித்தார். வருணன் "நீர் நினைத்த இடத்தில் குதிரைகள் எழும்" என்ருன். கான்ய குப்ஜ தேயத்திற்கு அருகில் அவர் நினைத்த மாத்திரத்தில் கங்கைத் துறையில் அழகிய குதிரை கள் தோன்றின. இன்று அந்த இடத்தை அசுவதீர்த்தம் என்று கூறுகின்ருர்கள். குதிரைகளை காதியிடம் அவர் தந்தார். காதி சத்தியவதியை. அவருக்கு விதிப்படி திருமணஞ் செய்து கொடுத்தான். உத்தமமான கணவனைப் பெற்ற சத்தியவதி. பெரிதும் மகிழ்ந்தாள். ரிசீகமுனிவர் சத்தியவதியுடன் இனிது வாழ்ந்து வந்தார்.

நெடுநாட்களுக்குப் பின் காதி தன் மனைவியுடன் கானகஞ் சென்ருன். மருகராகிய மாதவமணி ரிசீகரையும் மகளையுங் கண்டு களித்தான். தாயின் வேண்டுகோளுக்கு இணங்கிய சத்தியவதி, தன் கணவரைப் பார்த்து நாணத்துடன் "தபோ தனரே! எனக்கும் என் அன்னைக்கும் சிறந்த புத்திரப் பேறு கிடைக்க அருள்புரியும்" என்ருள்

ரிசீகர் "அப்படியே உங்களுக்கு இந்த நலன்கள் கிடைக்கும்" என்று கூறினர். இரு மண் ஏனங்களில் நீர் நிரப்பி மந்திரித்தார்.

பெண்ணே! இது உனக்கு உரியது; இது உன் தாய்க்கு உரியது; நாளை நீங்கள் நீராடி இதனைப் பருகவேண்டும். உன் தாய் அரச மரத்தையும்,நீ அத்தி மரத்தையும் தழுவிக்கொள்ள வேண்டும்" என்று கட்டளையிட்டார்.

மறு நாள் தாயிடம் சத்தியவதி இதனைக் கூறினுள். தாய் "மகளே! நீ என் சொல்லைத் தட்டக்கூடாது. தனக்குச் சிறந்த மைந்தன் பிறக்க வேண்டும் என்றுதான் யாரும் எண்ணுவார்கள். உன் கணவர் உனக்கு உயர்வாகவே மந்திரித்திருப்பார் அம்மா! ஆதலால் இந்த மந்திர ஏனங்களை மாற்றிக் கொள்ளலாம். மரத்தையும் மாற்றிக் கொள்ளுவோம். உனக்கு உயர்ந்த தம்பி பிறக்கட்டும். இதற்கு நீ அவசியம் சம்மதிக்க வேணும்" என்று கூறினுள். சத்தியவதி தாய் சொல்லை மறுக்க அஞ்சி உடன்பட்டாள். அந்த நீர் ஏனத்தை மாற்றிக் குடித்தார்கள். தாய் அத்திமரத்தையும், சத்தியவதி அரசமரத்தையும் தழுவிக் கொண்டார்கள். இருவரும் கருக்கொண்டார்கள்.

ரிசீகர் கருவுற்ற மனைவியைக் கண்டார். திடுக்கிட்டார். "சத்தியவதி! நீயும் தாயும் நீரையும் மரத்தையும் மாற்றிக் கொண்டீர்கள் போலும். உன் தாய் சொல்லால் நீ ஏமாந்து போனுய். உனக்கு என்று மந்திரித்த நீரில் பிரம தேஜசு முற்றிலும் அமைத்தேன். உன் தாய்க்கு என்று மந்திரித்த நீரில் க்ஷத்திர பலம் அனைத்தும் அமைத்து வைத்தேன் முறை மாறிவிட்டது. உனக்கு வீர அரச குமாரன் பிறப்பான். உன் அன்னைக்கு சாந்தகுணமுள்ள அந்தண குமாரன் பிறப்பான்" என்றுர். இதனைக் கேட்ட சத்தியவதி பெருந்துயரம் அடைந்தாள். அழுதாள். கணவனைத் தொழுதாள். "பெருமானே! எனக்கு அரச குமாரன் பிறத்தல் கூடாது: இதனை ஒருசிறிதும் நான் விரும்பேன். என் மகன் வயிற்றில் வேண்டுமாயின் க்ஷத்திரியன் பிறக்கட்டும். எனக்கு அந்தணனே பிறக்க வேண்டும்" என்று பலமுறை வணங்கிக் கேட்டாள்.

ரிசீகர் தன் தவ வலிமையால் அப்படியே ஆகட்டும் என்றுர். சத்தியவதியின் வயிற்றில் ஜமதக்கினி பிறந்தார். ஜமதக்கினிக்கு அரச தருமமுடைய பரசுராமர் பிறந்தார். காதி

யின் மனைவி வயிற்றில் பிராம்மண தருமத்துடன் விசுவாமித்திரர் பிறந்தார். அதனால் அவர் அரசராக இருந்தும் அந்தணமை யுடன் இருந்தார்.

விசுவாமித்திரருடைய புதல்வர்கள் எல்லோரும் பிரம்ம ஞானிகள். மதுச்சந்தன், தேவராதன்,காலவமகரிஷி, யாக்ஞவல்கியர், பூதி, விபூதி முதலிய பல புதல்வர்கள். இவர்கள் எல்லோரும் வேதங்களை வெளியிட்டவர்கள். தரும புத்திரனே. ரிசீகருடைய மந்திர சக்தியுடைய கரக நீரால் அரச குலத்தில் பிறந்த விசுவாமித்திரர் பிரம்ம ரிஷியாக விளங்கினார்'' என்று கூறினார்.

## "ஊழ் பெரிதா? முயற்சி பெரிதா?"

யுதிஷ்டிரர் "பிதாமகரே! ஊழ் பெரிதா? முயற்சி பெரிதா? இதனை எனக்குக்கூறவேண்டும்" என்று கேட்டார்.

பீஷ்மர், "தருமா! இதனைப் பற்றி பிரமதேவரும் வசிஷ்டரும் உரையாடியிருக்கின்றார்கள். வசிட்டர் பிரம தேவரைப் பார்த்து ஊழ்வினைக்கு வலிமையதிகமா? முயற்சி தான் வலிமை யுடையதா? இதனை எனக்கு விளக்கமாக விளம்ப வேண்டும்'' என்று வினவினார்.

பிரமதேவர் கூறுவாராயினார். விதையிலிருந்து முளை முளைக்கின்றது; முளையிலிருந்து இலை யுண்டாகின்றது; இலையிலிருந்து காம்பு உண்டாகின்றது; காம்பிலிருந்து கிளை யுண்டாகின்றது; கிளையிலிருந்து மலர் உண்டாகின்றது; மலரிலிருந்து கனி யுண்டாகின்றது. கனியினால் திரும்ப விதை விளைகின்றது, வித்திலிருந்து திரும்ப எல்லாம் உண்டாகின்றன. விதையில்லாமல் ஒன்றும் உண்டாவதில்லை. விதை யின்றிப் பயனில்லை. விதை விதைப்பவன் நிலத்தை யடைந்து எவ்வகையான விதையை விதைக்கின்றானோ அவ்வகையான பயனையே அடைகின்றான். அது போல் நல்வினை செய்தவன் இன்பத்தையும், தீவினை செய்தவன் துன்பத்தையும் அனுபவிக்கின்றான். நிலமில்லாமல் விதை விளையாது; முயற்சி நிலம் போன்றது. விதை ஊழ் போன்றது. முயற்சி செய்தவனுக்கு ஊழ் விளைந்து பயன் தருகின்றது. நிலமும் விதையும் சேர்ந்தே பயன் தருவது போல், முயற்சியும் பண்டையூழும் சேர்ந்தே பயன் தருகின்றன. தீவினை செய்தவன் புண்ணில் உப்புநீர் விட்டது போல வேதனையை நுகர்கின்றான். அயர்ச்சியில்லாத

முயற்சி உயர்ச்சி தருகின்றது. தனம் தான்யம் கல்வி சுகம் புகழ் யாவும் முயற்சியால் விளைகின்றன.

பிராம்மணன் தூய்மையாலும், அரசன் வலிமையினுலும், வணிகன் முயற்சியினுலும், வேளாளன் தொழிலாலும் செல்வத்தைப் பெறுகின்ருர்கள். சோம்பேறியிடம் செல்வம் சேராது. சிறிய நெருப்பும் காற்றினுல் பெரிதாவதுபோல், சிறிய ஊழ் வினையும் முயற்சியால் பெரிதாகி நன்மை செய்கின்றது. முயற்சி என்ற எண்ணெயை விடவில்லையானுல் விளக்கு மங்கி விடுவது போல் வாழ்வு மங்கிவிடுகின்றது'' என்ருர்.

## வினையும் வினைப் பயனும்

எவன் எந்த எந்த வினைகளைச் செய்வானே அவன் அவைகளை நுகர்கின்ருன். வந்த விருந்தினனிடம் குளிர்ந்த பார்வையிருக்கவேண்டும்; இனிய மொழி கூறவேண்டும். அன்புடன் உபசரிக்க வேண்டும். பின் சென்று வழிவிட வேண்டும். பலருக்கு அன்னமிட்டவன் மறுபிறப்பில் பெரு நிலக்கிழாராக விளங்குவான். தரையில் படுத்து விரதமிருந்தவன், சிறந்த பஞ்சணை, கட்டில், மஞ்சம் முதலிய சுகங்களை யடைவான், மரவுரியுடுத்து விரதம் அநுஷ்டித்தவன் சிறந்த ஆடை அணி கலன்களை யுடையவனுக விளங்குவான். நடந்து க்ஷேத்திர யாத்திரை செய்தவன் தேர், குதிரை, யானை முதலிய வாகனங்களைப் பெறுவான்; பொய்யாமையால் மெய்யான பதத்தைப் பெறுகின்ருன். எவனைக் கண்டு தந்தை மகிழ்கின்ருனே அவனைக் கண்டு பிரமதேவர் மகிழ்கின்ருர். எவன் தாயை திருப்தி செய்து வைப்பானே அவனை நிலமகள் ஆதரிக்கின்ருள். எவன் குருவை மகிழ வைக்கின்ருனே அவனிடம் தெய்வம் மகிழ்ச்சி யடைகின்றது. தாய், தந்தை, குரு இந்த மூவரையும் ஆராதிக்காதவன் செய்யும் புண்ணியங்கள் யாவும் களர் நிலத்தில் இட்ட விதைகளைப் போல் பயனற்றுப் போகின்றன. உள்ளத்தை வென்றவன் உலகத்தை வென்றுவிடுகின்ருன். மனதடங்கியவனுக்குச் சினமடங்கி விடுகின்றது. தனம் உள்ளவனிடம் தானம் இருக்கவேண்டும்; நிதியுள்ளவனிடம் நீதியிருக்க வேண்டும், மனம் உள்ளவனிடம் மானம் இருக்க வேண்டும். இத்தகைய உத்தமமான குணங்களை யுடையவனை உலகம் வணங்குகின்றது'' என்ருர்.

## கருணையும் கிளியும்

தருமர் "பிதாமகரே! கருணையின் சிறப்பை எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். பீஷ்மர் கூறுகின்றார்.

காசிக்கு அருகில் அடர்ந்த வளமையான ஒரு வனம். வானளாவிய மரங்கள்; பூத்துக் காய்த்துக் கனிந்து கற்புடைய மாதர்களின் உள்ளம்போல் அந்த வனம் இனிமையாக விளங்கியது. ஒரு பெரிய வளர்ந்த மரத்தில் ஒரு கிளி சுகமே வாழ்ந்து கொண்டிருந்தது. மரத்தின் கனிகளைத் தின்று கொண்டு மகிழ்ந்திருந்தது.

காட்டில் வேட்டையாட வந்த ஒரு கொடிய வேடன் ஒரு மானைப் பார்த்து நஞ்சு தடவிய கணையை விடுத்தான். மான் ஓடி யொளிந்தது; மான்மீது குறிவைத்து விட்ட கணை கிளி வாசஞ் செய்த மரத்தின்மீது பட்டது. நஞ்சு தடவிய கணை யாதலால் அம்மரத்திலிருந்த இலைகளும், காய்கனிகளும் உலர்ந்து உதிர்ந்தன. மரம் பட்டுப்போய்விட்டது. கிளி அம்மரத்தின் நிலைமையைக் கண்டு இரக்கமுற்றது. பல காலம் வாழ்ந்து பயன்பெற்ற அம்மரத்தைவிட்டு வெளிப்படாமல் கிளியும் அதன் பொந்தில் வாடி வதங்கியது. நன்றியறிவுள்ள கிளி எங்கும் போய் இரை தேடாமல் பட்டினியாகவே இருந்தது. களைத்து இளைத்துவிட்டது. குரல் தழுதழுத்தது. மனிதனுக்கில்லாத அறிவும் அன்பும் உள்ள அக்கிளியின் கருணைத் திறத்தைக் கண்ட இந்திரன் அதிசயமடைந்தான். ஆ ஆ! இக்கிளியின் குணம் பாராட்டுதற்குரியது. இந்தக் குணம் உயர்ந்தது" என்று எண்ணினான். மனித வடிவுடன் கிளியின்முன் வந்தான்.

"ஏ கிளியே! நீ பட்டுப்போன இம்மரத்தைவிட்டு விலகாமல் ஏன் வாடி வருந்துகின்றாய் ?" என்று கேட்டான். கிளி அவனைத் தலையால் வணங்கியது. "இந்திரரே! உனக்கு வணக்கம்; உனக்கு நல்வரவு. நான் தவத்தினால் உன்னை அறிகின்றேன்; நீ அந்தணன் அல்லன்; நீ தேவர் கோமான்" என்றது. கிளியின் அறிவைக் கண்டு "ஆ! இக்கிளியின் அறிவு சிறந்தது ? ஆ என்ன அறிவு ?" என்று தனக்குள் கூறிக் கொண்டாடினான்.

"கிளியே! உன் தாய் உன்னைப் பெற்றதனால் உத்தமியாக ஆனாள். இந்த வனத்தில் செழித்துள்ள மரங்களில் பல இருக்கின்றன. இம்மரம் பட்டுவிட்டது; இலையில்லை; மலரில்லை; காய்கனிகள் இல்லை; ஆதலால் இதனை விட்டுவிடு. வேறு வளமையான மரத்திற்கு நீ சென்று சுகமடைக" என்றான்.

இந்திரனுடைய சொற்களைக் கேட்ட கிளி பெருமூச்சு விட்டது. "அரசர் போற்றும் ஆண்டவனே! வளமையான இம் மரத்தில் நான் பிறந்தேன்; வளர்ந்தேன்; இதன் காய்கனிகளை யுண்டு, பகைவர் கைக்கு அகப்படாமல் பாதுகாவலாக இதில் வாழ்ந்தேன். இந்த நன்றியை நான் மறக்கலாமா? நன்றி மறந்தவனுக்கு நற்கதி ஏது? உண்மையான நீதிநெறிகளை யுணர்ந்த நீ என்னிடம் இவ்வாறு கூறுவது உனக்கு அழகா? மரம் வாழ்ந்தபோது மகிழ்ச்சியுடன் வாழ்ந்த நான், இது தாழ்ந்தபோது இதனுடன் நானும் தாழ்ந்து மடிவதுதானே அறம். அறநெறி நின்ற நான் இதனைவிட்டு அகலேன்; உயிர் என்னை விட்டாலும் நான் இம் மரத்தை விடேன்" என்று கூறிக் கண்ணீர் சொரிந்தது.

கிளியின் கருணையைக் கண்ட இந்திரன் இதயம் மகிழ்ந்தான். "கிளியே உன்மீது நான் கருணை கொண்டுளேன். உனக்கு என்ன வரம் வேண்டும்; கேள்; தருகின்றேன்" என்றான்.

கிளி "தேவராஜனே! எனக்கு ஒன்றும் வேண்டாம். இம் மரம் செழிக்க அருள் செய்" என்று கேட்டது. தருமந்தவறாத அந்தக் கிளியின் நற்குண நல்லொழுக்கத்தைக் கண்ட தேவேந்திரன் அம்மரத்தின்மீது அமிர்தத்தைப் பொழிந்தான். மரம் தழைத்தது. பூவும் பிஞ்சுகளும், காயும் கனியும் தோன்றின. கிளி மனமகிழ்ந்து, வாழ்நாள் முழுவதும் அதில வாழ்ந்து, முடிவில் இந்திரபதம் பெற்றது. ஆதலால் கருணை சிறந்தது" என்று கூறினார். (தொடரும்)

# அதிசயம்

## ''எதிரொலி விசுவநாதன்''

(240-ஆம் பக்கத் தொடர்ச்சி)

"உயிர்த்தவச் சிறிது காமமோ பெரிது'' என்று குறுந்தொகை கூறுகிறது.

இப்படி அவமே இறந்தொழிவது மனம் என்னும் காரணத்தால் சிறப்புற்ற மனிதருக்குத் தகுமோ?

இல்லினுள் இரண்டு நாளை சுற்றம் போன்ற இந்த வாழ்க்கையை அறவழிக்கண் செலுத்தி உய்ய வேண்டாமா?

''தேடிச் சோறு நிதந்தின்று—பல
சின்னஞ் சிறுகதைகள் பேசி—மனம்
வாடித் துன்பமிக உழன்று—பிறர்
வாடப் பல செயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப் பருவ மெய்தி—கொடுங்
கூற்றுக் கிரையென பின்மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போலே''

நாமும் வீழவா பிறந்தோம்?

இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பாரென்று எண்ணத் திடமில்லாத இவ்வுலகத்தின் பெருமை யாது ? இன்றைக்கிருந்தார் நாளை வெந்து நீருனார் என்னும் செய்திதான்.

இதனையே 'நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை உடைத்திவ் வுலகு' என்று திருவள்ளுவரும்,

"தந்தையார் போயினர் தாயாரும் போயினர் தாமும் போவார்'' என்று திருநாவுக்கரசரும்,

''வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்'' என்று தம்பிரான் தோழரும் பாடியிருக்கின்றனர்.

இவ்வுலக வாழ்வின் நிலையாமையைப் பற்றிப் பாடாத புலவர்களே இல்லை என்று சொல்லிவிடலாம்.

மரண சிந்தனை கொண்டு கூற்றுவன் வரப்போகிறான் என்று கருதி கவலைகொண்டு ஊண் உறக்கமின்றி அல்லும் பகலும் அழுதுகொண்டிருக்க வேண்டும் என்பது இப்பாட்டுக் களின் கருத்து அல்ல. இந்நிலையற்ற உலக வாழ்வில் நிலை யில்லாத காரியங்களுக்காகப் போராடாமலும், பாவங்களைப் புரியாமலும், நிலையான அறத்தையும் அன்பையும் மேற் கொண்டு எல்லோருடனும் ஐக்கியமாக என்றும் இன்பத்துடன் வாழவேண்டு மென்பதே மரணத்தை அடிக்கடி நினைவூட்டும் நமது முன்னோர்களின் கருத்தாகும்.

அறநெறியிலும் அன்பு நெறியிலும் மனிதன் வாழ்வதால் மரணத்தை வெல்லவுங்கூடும். உண்மை நெறியிலே வாழும் உத்தமர்களுக்கு மரணம் இயற்கையாகவும் இன்பமாகவும் நேர்கிறது. ஆனால் புன்னெறியிலே வாழும் புல்லர்களுக்கு மரணம் பயங்கரமாகவும் விபரீதமாகவும் தோன்றுகிறது. "பாவத்தின் சம்பளம் மரணம்" என்ற வாக்கில் மிகுந்த சாரமி ருக்கிறது. நல்ல நினைவும் நல்லொழுக்கமும் மெய்யுணர்வும் அருளாற்றலும் உடையவர்களை கூற்றுவன் தாக்கான் என்ற நம்பிக்கை நம் நாட்டில் நெடுங்காலமாக இருந்து வருகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் இறந்த போது நப்பசலையார் பாடிய 'செற்றன்றாயினும்' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலொன்று இந்நம்பிக்கைக்குச் சான்றாக விளங்குகிறது.

நீர்க்குமிழிக்கு நிகரான உலக வாழ்க்கையை நன்கு உணர்ந்தபேரும் நரியும் எரியும் உரிமைகொண்டாடும் இவ் வுடலின்பம் விரும்பி, வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல் விழுந்து தூங்கியும், பொன்னை, பூமியை வேண்டியும் இன்று நன்று நாளை நன்று என்றவாறு வாழ்நாளை வீணே கழிக்கின் றனர்.

விண்தொடும் கோபுரக் கோயில்களும், திருக்குளங்களும், இறைவன் நினைவை ஒட்டி கொண்டாடப்படும் திருவிழாக் களும், நல்ல அறிவு நூற்களும் இவையாவும் இருந்தபோதும் அறிவை நல்வழியின் கண் செலுத்தி புண்படா உடம்பும், புரைபடா மனமும், பொய்படா வொழுக்கமும் வேண்டு

வாரில்லை. கண்மூடி மேனியை மண்மூடு முன்னமே காலத்தை அநுபவிப்பேன் என்று சூளுரைக்கின்ற மனிதர்கள் நல்வழி அறியாது பெண்களை விட்டென்னப் பேரின்பம் என்று பல வாறு மயங்குகின்றனர்.

> "ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப
> கோடியும் அல்ல பல"

என்று வள்ளுவரும்,

> "குறிகளும் அடையாள முங்கோயிலும்
> நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்
> அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
> பொறியிலீர் மனம் என்கொல் புகாததே"

என்று திருநாவுக்கரசரும் வருந்திப் பாடுகிறார்கள்.

இந்நன்னெறிக்கட் படாத பாவிகளைப் பார்த்தார் சிவப் பிரகாச சுவாமிகள். எவ்வகையினும் திருத்தமுறாத இப்பாவி களின் உயிர் இன்னும் போகாமலிருப்பது அவருக்கு அதிசய மாகப் பட்டது.

ஒருசிறு துளையுடைய குடத்து நீர் நில்லாது ஒழுகிப்போக ஒன்பது துளைகளை உடைய இவ்வுடம்பினின்று உயிர் நீங்கா திருத்தலைக் கண்டு அதிசயப்பட்டார்.

> வருந்து உயிரொன்பான் வாயி லுடம்பில்
> பொருந்துதல் தானே புதுமை?—திருந்திழாய்
> சீதநீர் பொள்ளல் சிறுகுடத்து நில்லாது
> வீதலோ நிற்றல் வியப்பு.

என்று சிவப்பிரகாச அடிகள் பாடுகிறார்.

பாவிகளின் ஓட்டை உடலில் உயிர் ஒழுகாது நிற்றல் அதிசய மன்றோ!

உ

முருகா

# கற்பு

---

## தணிகைநாயகி

கணபதிபுரத்திலே ராமநாதன் பரம ஏழை; உள்ளமுங் கோழை. அவனுக்கு சூரிய உதயமே தெரியாது. ஏன்? பகல் பன்னிரண்டு மணிக்கு மனைவி வற்புறுத்தி எழுப்பினல்தான் எழுவான். பரம சோம்பேறி. மனைவி ஏதாவது உணவு தந்தால் சாப்பிட்டுவிட்டு மறுபடியும் படுத்துக்கொள்வான். அவனுக்கு உலகமே தெரியாது; அப்பாவி. அவன் மனைவி தணிகைநாயகி மிகமிக உயர்ந்த உள்ளம் படைத்தவள். கற்புநெறி கடவாதவள். தன் உழைப்பினுலே குடும்பத்தை நடத்துகின்ருள். கணவனுடைய மனங் கோணுமல் நடப்பாள்.

அந்த ஊரில் விநாயகர் கோயில் மிகவும் முக்கியமானது. "வினைதீர்த்த விநாயகர்" என்பது அக்கோயிலில் எழுந்தருளியுள்ள கணேசரது திருநாமம். மிகவும் வரதமானவர். விநாயக சதுர்த்திக்குப் பல்லாயிர மக்கள் அங்கு குழுமி அவரை வழிபடுவர். தங்கள் தங்கள் இஷ்டகாமியங்கள் எல்லாம் நிறைவேறப் பெறுவர். குறைவேதுமின்றி அவருக்குத் திருவிழா நிகழ்த்துவர். தணிகைநாயகி நாடோறும் கோயிலுக்குப் போய் விநாயகப் பெருமானை வழிபடுவாள்.

வறுமையாகிய தீயின்மேல் கிடந்து நெளியும் நீள் புழுவைப்போல் தணிகைநாயகி சதா துன்பத்தையே அநுபவித்து வந்தாள். தனவந்தர்கள் வீடுகளில்போய் நெல் குத்தியும், கோதுமை அரைத்தும், வேறுபல கூலிவேலைகளைச் செய்தும், அதனுல் வரும் அற்ப ஊதியத்தைக் கொண்டு கணவனுக்கு உணவு தருவாள். தானும் கால் வயிறு அரை வயிறு உண்பாள். அதில் சிறிது மிகுதி செய்து தேங்காய் பழம் வாங்கி விநாயகப் பெருமானுக்கு நிவேதித்து வழிபடுவாள். மாலை நேரத்தில் சிறிது எண்ணெய் கொண்டுபோய் விநாயகர் கோயிலில் விளக்கேற்றி, அப்பனுடைய சந்நிதியில் நின்று என்புருகி

அன்புபெருகி விண்மாரி எனக் கண்மாரி பெய்து துதி செய்வாள்.

கருணையங் கடலே போற்றி கற்பகக் கனியே போற்றி
அருணலத் தரசே போற்றி ஆனைமா முகனே போற்றி
தருணநா யகனே போற்றி தற்பர போற்றி ஞானப்
பொருணல மருள்வாய் போற்றி புனிதனே போற்றி போற்றி.

என்று கல்லும் புல்லும் உருகப் பாடுவாள்.

ஒருநாள் மாலை அவள் கணவன் ராமநாதன் காதில் கட்டெறும்பு புகுந்து கடித்துவிட்டது. துடித்து எழுந்தான். மனைவியைக் காணவில்லை. கனல்போல் சீறினன், எங்கு போனுள்? வரட்டும் நான் பேசிக்கொள்கிறேன். என்று சினங் கொண்டான். தணிகை நாயகி வீடுசேர்ந்தாள். தன் கணவன் கோபத்தோடு விழித்திருப்பதைக் கண்டு நடுங்கினுள். கணவனைத் தொழுதாள். ராமநாதன், "அடியே! எங்கு போயிருந்தாய்?" என்று கேட்டான், தணிகை நாயகி "என் அன்பே! கருணைக் கடலாகிய கணேசப் பெருமான் கோயிலுக்குப் போயிருந்தேன்" என்றுள். ராமநாதன், "ஓபாமல் கோயிலுக்குப் போகினுயே? என்ன பலனைக் கண்டாயடி? நமது தரித்திரங் தொலையவில்லையே? 'கணேசா கணேசா' என்று கதறுகின்றனையே? அவர் என்னடி உனக்கு உதவி செய்தார்?" என்று பரிகசித்தான். தணிகை நாயகி "பிராணேசா! காலமறிந்துதானே அருள் புரிவார்? கேவலம் செல்வத்தைத் தானு அவரிடம் விரும்பவேண்டும்? அழியாத முத்தி உலகத்தைத் தருவாரே. கற்பக விருட்சத்தினிடம் போய் காடித் தண்ணீரைக் கேட்கலாமா? செல்வம் சிறியரே மதிப்பதன்றே?

திருவாக்குஞ் செய்கருமங் கைக்கூட்டுஞ் செஞ்சொல்
பெருவாக்கும பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானேரும் ஆனைமுகத் தானைக்
காதலால் கூப்புவர்தங் கை.

என்று கபிலதேவர் கூறியருளியதை நீர் கேட்டதில்லையா?" என்ருன். ராமநாதன் "ஆமாம்! செல்வம் இல்லாமல் உலகில்

வாழ்வது எப்படி முடியும்; சோறு போடாத சாமி சொர்க்கமா தரப்போகின்றது ?" என்று பலவாறு பேசினன். தணிகை நாயகி ஒன்றும் பேசாதிருந்துவிட்டாள். மனத்திற்குள் "என் ஐயனே! விநாயக மூர்த்தி! தண்ணருள் பொழியும் தயா மேகமே! ஞான வேழமே! பாசாங்குசப் பரமனே! ஐங்கரத் தண்ணலே! என் கணவனுக்கு நல்லருள் புரிவாய்" என்று வேண்டினுள்.

விநாயகப் பெருமான் அவள் முறைக்கு இரங்கி, ராமநாத னுக்கு நல்லறிவு தோன்றும் பொருட்டு திருவருள் புரிந்தார். தணிகை நாயகி நாள்தோறும் வீட்டில் பூசிக்கும் விநாயகருக் குக் கீழ் உள்ள பலகை ஆடியது. நன்ருகப் படியாமலிருக் கின்றது போலும் ? அதை எடுத்து படியவைக்கவேண்டு மென்று பார்த்தாள். அதன்கீழ் ஒரு தவலை யிருந்தது மேல் மூடியை எடுத்துப் பார்த்தாள். நிரம்பத் தங்கக் காசுகளாக இருந்தது. ஓடிப்போய் கணவனைத் தட்டி யெழுப்பினுள். அவன், 'ஏண்டி என்னைத் தொந்தரவு செய்கின்ருய்' என்ருன். தணிகை நாயகி, "சுவாமி! விநாயகர் கருணையை வந்து பாருங் கள். 'அவர் உனக்கு என்ன உதவி செய்தார்' என்று கேலி பண்ணினீரே ? பிள்ளையார் பலகையின் கீழ் தங்கப் புதையல்" என்ருள். ராமநாதன் திடுக்கிட்டு எழுந்தான். ஓடி வந்து பார்த்தான். தவலை நிறைய தங்கக் காசுகளைக் கண்டான். அதிசயமடைந்தான். விநாயகருடைய கருணையையும், மனை வியின் ஒப்பற்ற பக்திநலத்தையும் எண்ணி விம்மிதமுற்ருன். அச்சமும் ஆர்வமுமெய்தினன். "பெண்ணே! இவ்வளவு பணத்தை என்னடி செய்யலாம்" என்ருன்.

தணிகை நாயகி "நாதா! செல்வம் நிலையற்றது அதை வைத்துப் பெட்டியில் பூட்டி கண்மூடி மாண்டு மண்மூடிப் போனவர் பலர். நல்லவழியில் செலவழிந்ததுதான் நம்முடை யது. ஆதலினுல் அப்பா கொடுத்த இந்த செல்வத்தை அவரு டைய திருக்கோயில் திருப்பணிக்கே வழங்கிவிடுவோம்" என் ருள். அவளுடைய மாசற்ற மனமும் பற்றற்ற பக்தியும் பாராட்டற்குரியன; ராமநாதன் மனந் திருந்தி உய்வுபெறும் காலமடைந்தானுதலின் அதை மறுக்கவில்லை. "என் அருமைக் கண்ணே! உனது விருப்பப்படியே செய். இன்றுதொட்டு நான்

புனிதனுனேன். ஐந்துகரப் பெருமானைப் பணிவேன். வினை களைத் தணிவேன்'' என்ருன்.

பிறகு தணிகை நாயகி அந்த பொற்காசு நிறைந்த தவலை யை மாலை திருக்கோயிலுக்குக் கொண்டுபோய் அக்கோயில் அதிகாரியைக் கண்டு அவனிடம் தந்து ''இது ஐயனுடைய நிதி; இதனை அவருடைய திருப்பணிக்கு வைத்துக் கொள்ளுங்கள்'' என்று தந்தாள். அந்த அதிகாரி மலை விழுங்கி மன்னூர் சாமி; கோயிற்பெருச்சாளி; அஞ்சா நெஞ்சு படைத்தவன். மிகுந்த மகிழ்ச்சியுடன் அதை வாங்கி ஒருபுறத்து வைத்திருந்து, இரவு 11 மணியானதும் முழுவதும் தானே எடுத்துக்கொள்ள விரும்பி வீட்டிற்குக் கொண்டுபோனான். அவன் மனைவி அவனை விழுங்குபவன். ''இன்றைக்கு என்ன கிடைத்தது?'' என்ருள், அவன், ''அடி அசடே! அவசரப்படாதே. தங்கக்காசு நிறைந்த தவலை, ஒரு பித்துபிடித்த பெண்பேதை கொணர்ந்து கொடுத் தாள். சாமியாவது பூதமாவது நான் அப்படியே கொணர்ந்து விட்டேன்'' என்ருன். அவள் தங்கக் காசு என்றவுடனே வாயைப்பிளந்து மேல்மூடியை எடுத்தாள். இருவருக்கும் அவசரம். ஒருவரை யொருவர் தள்ளிக் கொண்டு ஏககாலத்தில் அதில் கையை விட்டார்கள். அதுநிறைய தேளும் நட்டுவாக் காலியும் இருந்து அவர்கள் உடல் முழுவதும் கொட்டிவிட்டன. விடம் ஏறி துள்ளித் துடித்தார்கள். இரவெல்லாம் அழுது தங்கள் கொடுஞ் செயலைக் குறித்து வருந்தினுர்கள். பொழுது புலர்ந்தது. அத் தவலையை மூடி, அரை உயிராய் அதை எடுத்துக்கொண்டுவந்து தணிகைநாயகி வீட்டிற்கு வந்து, ''அம்மா! எங்கள்மீது உனக்கு என்ன பகை? எத்தனை நாளாக இப்படி யோசித்தாய்? அந்தோ! உயிர் துடிக்கின்றதே. தேளும் நட்டு வாக்காலியும் நிறைந்த தவலையைக் கொடுத்து எங்களைத் துன்புறுத்தினுயே? இந்தா உன் தவலை'' என்று கூறி வைத்தான். அதனைக் கேட்ட ராமநாதனும் தணிகைநாயகியும் அதிசயமடைந்து திறந்து பார்த்தார்கள். நிரம்ப பொன் காசுகள் இருக்கக் கண்டார்கள். கோயில் அதிகாரியும் அவன் மனைவி யும் அதனைக் கண்டு ஆச்சரியமடைந்து அவர்கள் கால்மேல் விழுந்து, ''அம்மா! நீ கலியுகத்தில் கண்கண்ட தெய்வம். எங்கள் வினை எங்களைச் சுட்டுவிட்டது. ஆகா! சற்றுமுன் தேளும் நாட்டுவாக்காலியுமாக இருந்ததே. இப்போது அவ் வளவும் தங்கக்காசுகளாக இருக்கின்றதே! எங்களை மன்னிப்

பாய்" என்று வேண்டினர், தணிகைநாயகி அவர்களுடைய பரிதாபமான நிலையைக் கண்டு இரக்கமுற்ருள். "ஐயா! இனி யாவது கோயில் உடைமையை அபகரிக்காதே. விநாயகமூர்த்தி யின் பெருமையை உணர்ந்து அவரை வழிபட்டு கடைத்தேறு வாய்" என்ருள்.

பின்னர் அந்த நிதியைக்கொண்டு தணிகைநாயகி விநாயகப் பெருமானுக்கு திருவாபரணங்களும் தங்க மூஷிக வாகனமும், பூஜைக்குரிய நிலங்களும், ஏழைகள் பசியாறுவதற் குரிய ஏற்பாடுகளும் செய்தாள். விநாயக மூர்த்தியின் கருணை யால் ராமநாதனும் தணிகைநாயகியும் குறைவின்றி நெடுங் காலம் வாழ்ந்து, திருத்தொண்டுகள் பலசெய்து விநாயக மூர்த்தியின் திருவடியைச் சார்ந்தனர்.

---

மதிவதன மாடவிரு காதினவ ரத்னமணி
மகரகுண்டல மாடநாண்
மலர்ப்புண்ட ரீகவிழி யாடவரு ளாடமன
மகிழ்மந்த காசமாடக்
கதிருதய மாயிரங் கோடியென வேயிலகு
காருண்ய மேனியாடக்
கனவச்ர புயவலய மாடவண் டாடக்
கடப்பமலர் மாலையாட
விதமணி யிழைத்தபரி புரமாடு சரணார
விந்தங்க ளாடநீள்கை
வெற்றிவே லாடமயி லாடவென் கண்முனி
விளையாட வோடிவருவாய்
முதுமறைக ளாகம முழங்குபுள் ளூரனே
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே.

—புள்ளிருக்குவேளூர் முத்துக் குமாரசாமி திருவருட்பா.

## எமது வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. | 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. | 3-50 |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. | 1-50 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற்படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. | 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. | 5-00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்றாவது தொகுதி (மூன்றாவது படைவீடு—பழநி) | ரூ. | 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. | 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோறாடல் முதற்பாகம் | ரூ. | 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆறும் தொகுதி (குன்றுதோறாடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. | 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. | 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. | 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. | 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. | 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. | 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. | 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. | 0-50 |

---



---